Registered No. M. 2330

"SIDDHANTHAM"
Vol. 39—No. 7



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 39 | பராபவ ஆடி 1966 ஜூலை | இதழ் 7

உள்ளுறை — பக்கம்



பத்திராசிரியர்: மு. அருணாசலம், எம். ஏ.,
உதவிப் பத்திராசிரியர்: வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி 25 காசு

# சமாஜச் செயற்குழுக் கூட்ட அறிவிப்பு

31-7-66 ஞாயிறன்று காலை 9-30 மணிக்குச் சமாஜ அலுவலகத்தில் செயற்குழுக்கூட்டம் நிகழும் மாதக்கணக்கு சரிபார்த்தல், சிறப்புக்கூட்டங்கள் நடத்துதல் முதலிய பல பொருள்கள் பற்றிய முடிவுகள் தீர்மானிக்கப்பெறும். உறுப்பினர்கள் யாவரும் தவறாது வருமாறு கேட்டுக்கொள்ளப் பெறுகிறார்கள். (செயலாளர்)

## சமாஜச் செய்திகள்

நம் சமாஜச் சார்பில் மாணிக்கவாசகர் திருநாள் மயிலை கபாலீச்சுரத்தில் 26-6-66 ஞாயிறன்று மாலை நிகழ்ந்தது. வித்துவான் திரு. வை. குஞ்சிதபாதம் பிள்ளை அவர்கள் "மாணிக்கவாசகரும் திருவாசகமும்" பற்றி விளக்கிப் பேசினார்கள்.

## பிற செய்திகள்

### சேக்கிழார் விழா

தெய்வச் சேக்கிழார் பெருமான் அவதாரம் செய்த குன்றத்தூரில் (சென்னைக்குத் தென்மேற்கு பதினொருவது கல்லில் உள்ளது) ஆண்டுதோறும் வைகாசித் திங்களில் அப்பெருமானுக்குப் பத்து நாட்கள் பெருவிழா நடைபெறுவது உண்டு. இவ்வாண்டும் அவ்வாறு விழாச் சிறப்பாக நடைபெற்றது. சேக்கிழார் பெருமான் திருவுருவம் பகல் இரவுகளில் வழக்கம்போல ஊர்வலமாக வந்தது.

இப்பத்துநாள் விழாவிலும் வழக்கப்படி 16-5-66 முதல் 25-5-66 வரை சேக்கிழார் திருப்பணிக் கழகத்தாரால் அங்குள்ள சேக்கிழார் திருமடத்தில் முற்பகல் பிற்பகல் நேரங்களில் காஞ்சீபுரம் மகாவித்வான், பொன். சண்முகனார் அவர்கள் ஆசிரியராக அமர்ந்து பெரியபுராண வகுப்புக்களைத் தம் அரிய ஆராய்ச்சி நிரம்பிய புலமைத் திறத்துடன் நடத்தினார்கள் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் புலவர்கள் பலர் வந்து இருந்து பாடங்கேட்டு மகிழ்ந்தனர். முதல்நாள் வகுப்பு சேக்கிழார் பெருமான் கோயிலில் திருவள்ளூர் ஊராட்சி ஒன்றிப்பு ஆணையர் திரு. சி. மெய்கண்டார் அவர்களால் தொடங்கிவைக்கப்பட்டது.

Reg. M. 2330 உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு.

| மலர் 39 | பராபவ ஆடி 1966 ஜூலை | இதழ் 7 |
|---|---|---|

## "சைவ சித்தாந்தா"

(துணையாசிரியர்)

"சொல்லுதல் யார்க்கும் எளிது அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்"

என்பது நம் தமிழ் மறை. இந்த வாக்கு எவ்வளவு உண்மையானது என்பதைப் பொதுத் துறைகளிலும் பிற துறைகளிலும் அனுபவப்பட்டவர் நன்குணர்வர்.

நம்மொழி எவ்வளவு சிறப்புவாய்ந்தது என்று பல மேனாட்டு அறிஞர்களும் கூறினரோ அதற்குச் சிறிதும் பிற்பட்டதன்று தெனனாட்டுச் சமயக் கொள்கையாய சைவசித்தாந்தமும். அதன் சிறப்பு பலகண்டங்களுக்கும் பரவவேண்டும் என்றெல்லாம் பலர் வாய்கிழியப் பேசினர். பேச்சோடு நின்றுவிடக்கூடாது என்று நம் சமாஜம், "திறமான புலமையெனில் வெளிநாட்டோர் அதை வணக்கம் செய்தல் வேண்டும்" என்றதற்கேற்ப அவர்கள் புரிந்து வணங்கிப் போற்றத்தக்க சூழ்நிலையை உருவாக்க வேண்டி ஆங்கில முத்திங்கள் இதழாய "சைவசித்தாந்தா" என்னும் பெயர்தாங்கிய ஒரு இதழை ஆரம்பித்தது. இரண்டு இதழ்கள் இதுவரை வெளிவந்தாயிற்று. ஆறு திங்கள்களாயும் அவ்விதழுக்குச் சந்தாதாரர்கள் சேர்ந்த நிலையை நோக்கும்போது வருந்தாமலிருக்க முடியவில்லை,

இதுகாறும் ஏறக்குறைய மூந்நூறு சந்தாதாரர்களே சேர்ந்துள்ளார்கள். நல்ல பெரியார் இதழாசிரியராகக் கிடைத்துள்ளார். தலைசிறந்த பெரியோர்கள் கட்டுரைகள் எழுதுகின்றனர். கவர்ச்சியுள்ள அச்சு, மேனாட்டாரும் போற்றும் வகையில் இதழமைப்பு முதலிய பல பொருத்தங்களிருக்கினும் அவ்விதழுக்குப் போதுமான சந்தாதாரர்கள் சேராமைக்குரிய காரணங்களை நம்சமாஜ உறுப்பினர் ஒவ்வொருவரும் சிந்திக்கவேண்டாவா? சிந்தித்து ஆவன கருதுமின். என்ன செய்யவேண்டும் எனக் கேட்கின்றீர்களா?

1. உங்களுக்கு ஆங்கிலம் தெரிந்தால் அம்மொழி அறிவை விருத்தி செய்துகொள்ளவும் உங்கள் ஆங்கிலந் தெரிந்த நண்பர்களுக்கு இவ்விதழைக் காட்டிப் படிக்கச் செய்து உறுப்பினராகவும் செய்யுங்கள்.

2. உங்களுக்கு ஆங்கிலம் தெரியாவிடில் தெரிந்த நண்பர்களுக்கு இவ்விதழைப்பற்றி எழுதிஅவசியம் சிலரையாவது உறுப்பினர் ஆக்க முயலுங்கள்.

3. பம்பாய், கல்கத்தா போன்ற நம் தமிழ் நாட்டின் அப்பாலுள்ள இடங்களில் வசிக்கும் நண்பர்களுக்கு இவ்விதழின் பெருமையை விளக்கி எழுதி இதனை வாங்கச் செய்யுங்கள்.

4. பொது நிலையங்கள், படிப்பகங்கள், கல்வி நிலையங்கள், நூல் நிலையங்கள் முதலியவற்றில் இவ்விதழை வாங்கி என்றும் சேமித்து வைக்க வழிவகை செய்யுங்கள்.

5. கடல்கடந்த நாடுகளில் உள்ள உங்கள் நண்பர்களுக்கும் இதைப்பற்றி எழுதி அவர்களைச் சந்தாதாரர்களாக ஆக்குங்கள்.

6. இன்னும் இவ்விதழின்சந்தாதாரர்கள் அதிகமாக ஆவதற்கு ஏதாவது உங்களுக்குத்தெரிந்த யோசனைகளிருந்தாலும் சமாஜச் செயலாளருக்கு அவற்றை எழுதி உதவுங்கள்.

இவ்வாறு பலரும் கூடி முயன்று ஒத்து உழைத்தால் தான் நம் சமயம், கொள்கைகள் முதலியன யாண்டும் பரவுமே யொழிய ஏதோ பத்திரிக்கையை ஆங்கிலத்தில் அச்சடித்து விட்டால் மாத்திரம் போதாது.

இதற்கு முன்னரே ஆசிரியர் மறைமலையடிகள், ஜெ. எம். நல்லசாமிப்பிள்ளை ஆகிய பெரியார்கள் ஆங்கிலம் மூலம் நம்சமயக் கொள்கைகளை வெளி நாட்டவருக்குப் பரப்ப முனைந்தார்கள். தனிப்பட்டவர்களின் முயற்சி யானதினுலும் பொதுமக்கள் ஆதரவு நன்கில்லாமையா லுமே அம்முயற்சிகள் இடையிலேயே நின்றுவிட்டன. சில ஆண்டுகளே அவ்விதழ்கள் வெளிவந்தாலும் அவை என்றும் போற்றத்தக்க சிறப்பினைக் கொண்டிலங்கின என்பதனை அவ்விதழ்களை இப்பொழுது படித்துப் பார்த் தாலும் தெரியலாம்.

அதனுல் உங்கள் ஒத்துழைப்பு மிகமிக இன்றியமை யாத் தேவையாகும். ஆங்கிலச் "சைவசிந்தாந்தா"வுக்குச் சந்தாதாரர்கள் உடனே தேவை. இதுகண்டதும் முயன்று ஒல்லும்வகையான் சந்தாதாரர்களைச் சேர்த்துதவுமாறு கேட்டுக் கொள்கின்ருேம். ஆண்டொன்றுக்கு ரூ. 5-00.

'ஆண்மையாளர் உழைப்பினை நல்கிர்'

—:(o):—

# தக்களூர்

மு. அருணுசலம்

இடம் : பேரளம் - காரைக்கால் பஸ் மார்க்கத்தில் திருநள்ளாறு கடந்து ஒரு மைல் கிழக்கே சென்றவுடன், சாலையின் தென்புறத்தில் உள்ளது; காரைக்காலிலிருந்து மேற்கு நோக்கி வந்தால் இரண்டு மைல் தூரம் பழைய பிரெஞ்சுக் காரைக்கால் எல்லையில் உள்ளது.

கோயில் : கொஞ்சகாலத்துக்கு முன் தேவகோட்டை மெ. இராமநாதன் செட்டியாரால் கருங்கல் திருப்பணி

செய்யப் பெற்றுள்ளது. கோயில் முழுமையும் அழகாகக் கருங்கல்லால் நன்கு விலாசமாகக் கட்டப்பெற்றுள்ளது. கிழக்கு நோக்கிய கோயில், முன்புறம் வாயில்; கோபுரமில்லை. விசாலமான பிராகாரங்கள், இழே செங்கல் தளவரிசை, வெளி மதில்கள் உயரமானவை. செங்கல் நல்ல நிலைமையிலுள்ளது. மடைப்பள்ளி இலமாயிருக்கிறது. பின்புறம் திரு மாளிகைச்சுற்று—அம்பிகை சந்நிதிக்கெதிரே விசாலமான பெரிய கருங்கல் மண்டபம். அம்பிகை வழக்கம் போல் தெற்கு நோக்கிய சந்நிதி. மகா மண்டபமும் விசாலமான கருங்கல் மண்டபம். தனி நடராச சபை இல்லாவிட்டாலும் இங்கு உரிய இடத்தில் சபையில் நடராசர் இருக்கிறார். மூல விமானத்தில் பெரிய சுதை உருவங்கள் அழகாகச் செய்யப்பெற்றிருந்து அழிந்து வருகின்றன.

பெயர் : சுவாமி திரிலோகநாதர், அம்பிகை தர்மசம்வர்த்தனி (அறம் வளர்த்த நாயகி). தலவிருட்சம் தெரியவில்லை.

மூர்த்தி ; மகாலிங்கம் நடுத்தர அளவு. அம்பிகை மூலவர் அழகான பெரிய வடிவம். தென்புறக் கோட்டத்தில் சிறிய தக்ஷிணாமூர்த்தி. நிருதிமூலையில் விநாயகர். அடுத்து கோட்டத்தில் லிங்கோற்பவ மூர்த்தி வைக்கப்பெற வில்லை. எதிரில் முருகன் வழக்கமாய் இருக்கும் இடத்தில் காசி விசுவநாதர் விசாலாட்சி. திருமாளிகைச் சுற்று வடகோடியில் தேவியோடுகூடிய முருகன்; அடுத்து கஜலக்ஷ்மி, தூக்கிய துதிக்கையோடு கஜங்கள் தனியே நிற்கின்றன. சிறிய சண்டேசர். துர்க்கை இல்லை: பைரவர் சூரியன், உற்சவ மூர்த்திகள் அனைவரும் உள்ளனர். நடராசரும் அம்பிகையும் சிறிய வடிவம். மாணிக்கவாசகர் சற்றே பெரிய உரு; பஞ்ச மூர்த்திகளும் பிறரும் உள்ளனர்; விநாயகர் பெரியவடிவம். உருவங்கள் பழையவையாகத் தோற்றுகின்றன.

விழா : திருவாதிரை மட்டும் நடக்கிறது. சொத்து அதிகம் இல்லாமையால் சிறப்பு விழாக்கள் நடைபெற வழி இல்லை. திருவாதிரை விழாவும் வெளியார் உபயம்.

கல்வெட்டு இருந்ததா என்பது தெரியவில்லை. திருப்பணிக்காலத்தில் கற்கள் அகற்றப்பட்டமையால் கல்வெட்டுக்கள் மறைந்திருக்கக் கூடும்.

நிர்வாகம் : திருநள்ளாற்றுக் குருக்கள் இங்கு வந்து பூஜை செய்து வருகிறார். கோயிலை இன்று பழுதுபார்த்துச் சுத்தம் செய்து வைத்தால் கெடாமல் நீண்ட நாள் இருக்கக் கூடும். எங்கும் களைகள் முளைத்திருக்கின்றன.

பாடல் : வைப்புத்தலமாக வைத்துப்பாடியிருப்பதே இதற்குரிய சிறப்பு. அப்பர் தாண்டகத்துள் மூன்றிடங்களிலும், சுந்தரர் ஊர்த்தொகை முதற்பாட்டிலும் இதைக் குறிப்பிடுகிறார்கள்.

---

# தமிழர் சைவ சமயம்

(வித்துவான் பெ. கோவிந்தன்)

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
  நித்தலுமெம் பிரானுடைய கோவில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
  பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
  சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதீ யென்றும்
  ஆரூரா என்றென்றே அலறா நில்லே.

(அப்பர் தேவாரம்)

சிவனைக் கடவுளாகக் கொண்டு தமிழர் வழிபடும் சமயம் சைவசமயம். சிவ வழிபாடு ஒரு காலத்தில் உலக முழுதும் இருந்தது என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். இன்று சைவசமயம் இமயமுதல் குமரி வரையிலும் இலங்கையிலும் நிலைத்து நிற்கிறது. சிவவழிபாடு பழைய தமிழர் வழிபாடாம்.

கடவுள் உயிர்களை மண்ணுலகில் பிறப்பிக்குஞ்செயல் அவைகளுக்கு அறிவையும் இன்பத்தையும் சிறிது சிறிதாகப் பெருக்கி அவைகளை முற்றறிவுடையனவாகவும் பேரின்ப முடையனவாகவும் ஆக்குதற் பொருட்டாம். உயிர்கள் பல பிறப்புக்களிலும் பிறக்குஞ் செயல்கள் தம் அறிவை மறைத்திருக்கும் ஆணவ மலத்தின் நீங்கிப் பேரறிவையும் பேரின்பத்தையும் பெறும்பொருட்டாம். கடவுள் உயிர்களைப் பிறப்பித்து அவைகளுக்குப் பேரறிவையும் பேரின்பத்தையும் கொடுப்பவனாதலின் அவன் பிறவாதவனாகவும் பேரறிவினனாகவும் பேரின்பத்தவனாகவும் விளங்குகின்றான் என்று தமிழர் கண்டனர். தமிழர் தம் தமிழ் மொழிக்கும் தம் வாழ்க்கைக்கும் இலக்கணம் வகுத்தது போலச் சிவன் பிறப்பிறப்பில்லாதவன் பேரறிவுடையவன் பேரின்ப முடையவன் என்று தம் கடவுளுக்கும் இலக்கணம் வகுத்தனர்.

சிவபெருமானுக்குப் பொது வியல்பு, சிறப்பியல்பு என்ற இரண்டு இயல்புகள் உள்ளன. உலகங்களையும் அவற்றில்வாழும் உயிர்களையும் படைத்தலையும், படைக்கப்பட்ட உயிர்களுக்கு அதனதன் வினைக்கீடாக இன்ப துன்பங்களைக் கொடுத்துக் காத்தலையும், அவ்வுயிர்களை அழித்தலையும் படைத்தலும் காத்தலும் அழித்தலும் செய்யும் பொருட்டு உயிர்களுக்கு மறைந்திருத்தலையும் தன்னை வணங்கிவழிபடும் உயிர்களுக்குக் காட்சி கொடுத்து அருளையும் செய்யும் சிவன்நிலை பொதுவியல்பு என்று கூறப்படும். உயிர்களின் பொருட்டுப் பொதுவியல்போடு நிற்காமல் உலகங்களையும் உயிர்களையும் தன்னுள் ஒடுக்கிச் செயலற்றிருக்கும் சிவன் நிலை சிறப்பியல்பு என்று கூறப்படும்.

சிறப்பியல்போடு நிற்கும் சிவன் உருவமில்லாதவன். பொதுவியல்போடு நிற்கும் சிவன் அருவத்தோடும் அருவுருவத்தோடும் உருவத்தோடும் அடியார்கள் பொருட்டுச் செயல்படுதலின் அவன் உருவங்கள் அரு. அருவுரு, உரு என்று மூவகையினவாக வகுக்கப்படுகின்றன. சிவன் கோவில்களுள் காணப்படும் வான வெளி உருவம் சிவனுடைய அருவவடிவாம். கருவறையுள் அருவமும் உரு

வழுமின்றிக் காணப்படும் இலிங்க வடிவம் அவனுடைய அருவுருவவடிவாம். கூத்தப்பிரான், உமையொருபாகன், தென்முகக் கடவுள் முதலிய வடிவங்கள் அவனுடைய உருவ வடிவங்களாம். சிவனுடைய அருவாகிய ஞானவடிவம் ஞானிகளாலும் அருவுருவவடிவம் யோகிகளாலும் உருவவடிவங்கள் அடியார்களாலும் வழிபடப்படுகின்றன.

சிவபெருமான் வடிவங்களுள் கூத்தப் பெருமான் வடிவம், தமிழர் கூத்துக்கலையிலும் கூத்து முதலியவற்றை எழுதும் ஓவியக்கலையிலும் ஓவிய உருவங்களைப் போன்று செம்பு முதலியவற்றினுல் உருவங்களை வார்த்தமைக்கும் வார்ப்புக் கலையிலும் வல்லுநர் என்பதைப் புலப்படுத்துகிறது. உலகத்துச் செய்பொருள் உருவங்களுள் கூத்தப்பிரான் உருவம் தெய்வத்தன்மையிலும் அழகுத் தன்மையிலும் சமய உட்கருத்தை விளக்குவதிலும் தலைசிறந்தது என்று உலகத்தாரால் புகழப்படுகிறது. கூத்தப்பிரான் தன் நான்கு கைகளுள் வலது கைத் துடியினுல் உலகங்களைப் படைக்கிருன் என்பதும் வலதுகை அமைப்பினுல் அவற்றைக் காக்கிருன் என்பதும் இடதுகை நெருப்பினுல் அவற்றை அழிக்கிருன் என்பதும் தன் இரண்டுகால்களுள் தன் ஊன்றிய காலால் உயிர்களுக்குத்தான் ஒளிந்து நிற்கிருன் என்பதும் தூக்கிய காலால் தன்னை அடையும் அடியார்களை அருளுகிருன் என்பதும் கூத்தபிரான் உருவம் உணர்த்தும் சமய உட்கருத்துகளாம்.

உமையொருபாகன் வடிவம் மக்கள் இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு கணவன்மனைவியாகக் கூடிவாழ்ந்து உலக இன்பம் துய்க்கவேண்டும் என்பதை மக்களுக்கு உணர்த்துகிறது. உமையொரு பாகன் வடிவோடு கூடிய முருகன் வடிவம் மக்கள் வாழும் இல்லற வாழ்க்கையில் பிள்ளைப் பேறு பெற்று வாழும் இன்பப் பேறு சிறந்தது என்பதை மக்களுக்கு உணர்த்துகிறது. உமை அல்லது கொற்றவையும் முருகனும் உருவ அளவிலும் பெயரளவிலும் வேறுபாடுடையரெனினும் அவரிருவரும் சிவபெருமானே யாவர்.

தென்முகக் கடவுள் வடிவம் இல்லறவாழ்க்கையை மேற்கொண்டு உலக இன்பந் துய்க்கும் மக்கள் தன்னை வணங்கும் முறையால் வணங்கித் தன்னடியடைய வேண்டும் என்ற சமய உட்கருத்தினை மக்களுக்கு உணர்த்துகிறது. தென் முகக்கடவுள் யோக வடிவினன். யோக வடிவம் தன்னை வழிபடும் மக்கள் தன்னை அடைவதற்கு யோக நெறியாகிய நினைப்பு வழிபாட்டு நெறியை மேற்கொள்ள வேண்டும் என்பதை உணர்த்துகிறது. தென்முகக் கடவுளினுடைய வலது கை தன்னிடத்திலுள்ள ஐந்து விரல்களுள் சுட்டுவிரலை அதனோடு இணைந்திருக்கிற மூன்று விரல்களின் நீக்கி மடக்கிப் பெருவிரலின் அடியில் பொருத்தியிருக்குஞ் செயல், மக்கள் தம்மோடு இணைந்திருக்கும் ஆணவம், ஊழ்வினை, மாயை என்ற மும்மலங்களின் நீங்கிக் கடவுளை அடைந்து பயன்பெற வேண்டும் என்பதை மக்களுக்கு உணர்த்துகிறது. வலது கையிலுள்ள ஐந்து விரல்களுள் பெருவிரல் சிவனையும் சுட்டுவிரல் உயிரையும் ஏனைய மூன்று விரல்களும் ஆணவம் ஊழ்வினை மாயைஎன்ற மும்மலங்களையும் உணர்த்துகின்றன. சுட்டுவிரல் பெருவிரலினுடைய அடியில் பொருந்தியிருத்தல் உயிர் சிவனடியை வழிபட்டுப் பேறுபெறுதலை உணர்த்துகிறது.

## உயிர்கள்

பிறந்திறப்பன உயிர்களாம். பிறப்பையும் இறப்பையும் அடைகின்ற உயிர்கள் ஓரறிவுயிர்கள் ஈரறிவுயிர்கள் மூவறிவுயிர்கள் நாலறிவுயிர்கள் ஐயறிவுயிர்கள் ஆறறிவுயிர்கள் என அறுவகையினவாம். புல்லும் மரமும் ஓரறிவுயிர்களாம் நந்தும் முரளும் ஈரறிவுயிர்களாம். சிதலும் எறும்பும் மூவறிவுயிர்களாம். நண்டும் தும்பியும் நான்கறிவுயிர்களாம். விலங்குகள் ஐயறிவுயிர்களாம். மக்கள் ஆறறிவுயிர்களாம்.

உயிர்கள் மரவினம், ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, விலங்குகள், மக்கள், வானவர் என்ற எழுவகைப் பிறப்புக்களை அடைகின்றன.

## தளைகள்

தளைகள் சிவபெருமானுக்கு இல்லை. உயிர்களுக்கே உள்ளன. தளைகள் ஆணவம் ஊழ்வினை (கன்மம்) மாயையம் என்று மூவகையின. ஆணவம் செம்பினிடத்துள்ள களிம்பு போல உயிரோடு பொருந்தி அதன் அறிவை மறைத்திருப்பது. ஊழ்வினை (கன்மம்) உயிர் பிறப்பை எடுப்பதற்கும் எடுத்த பிறப்பில் இன்பதுன்பங்களை எய்துவதற்கும் காரணமாக இருப்பது. மாயையம் உயிரோடு பொருந்தியிருக்கும் ஆணவத்தை நீக்குவதற்கும் உயிரினுடைய அறிவைப் பெருக்குவதற்கும் கருவிகளாக இருக்கும் உடம்பும் உலகமும் உலகப் பொருள்களுமாம்

கடவுளும் உயிர்களும் தளையும் சைவ சமயத்தில் முப்பொருள்கள் என்று கூறப்படும். முப்பொருள்கள் என்றும் உள்பொருள்களாம்.

## வழிபாடு

உயிர்கள் தங்கள் அறிவை மறைத்துக் கொண்டிருக்கும் ஆணவ மலத்தைப் போக்குவதற்கும், இன்பதுன்பங்களைக் கொடுக்கும் ஊழ்வினையைப் போக்குவதற்கும், ஊழ்வினையாலுண்டாகும் பிறப்பைப் போக்குவதற்கும் சிவபெருமானைக் கடவுளாகக் கொண்டு வழிபாடு செய்ய வேண்டும். வழிபாடு கோவில் வழிபாடு நினைப்பு வழிபாடு மெய்யுணர்வு வழிபாடு என மூவகைப்படும்.

## கோவில் வழிபாடு

சிவன் உயிர்களுக்கு அருள் புரியும் பொருட்டு எழுந்தருளியிருக்கும் இடம் கோவில். கோவில்கள் ஆறு கடல் குளம் முதலிய நீர்நிலைகளுக்கருகிலும் மலைகளுக்கருகிலும் மேலிடத்தும் ஊர்கள் நடுவிலும் மரத்தின் கீழும் மன்றங்களிலும் சந்திகளிலும் இருக்கும். சிறிய கோவில்களில் சிவலிங்கமும் பெரிய கோவில்களில் சிவலிங்கமும் கூத்தப்பிரான் முதலிய திருவுருவங்களும் இருக்கும்.

கோவிலுக்குச் சென்ற அன்பர்கள் நீரும் பூவும் கொண்டு சென்று சிவபெருமானுக்கு நீராட்டிப் பூச்சூட்டி

வழிபட்டனர். கோவிலுக்குத் திருவலகிட்டனர்; மெழுக்கிட்டனர்; விளக்கிட்டனர். சிவபெருமானையும் அவன் எழுந்தருளியிருக்கும் கோவிலையும் வலம் வந்து முன்னின்று இன்னிசை பாடினர். யாழிசைத்தனர். தமிழ்த் திருமுறைகளை ஓதினர். கைகளைத் தலைமேல் குவித்துத் தொழுதனர். நிலத்தில் விழுந்து கும்பிட்டனர். உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும் உன்னையல்லால் ஒரு தெய்வம் உள்ளேனென்றும் புற்றரவக் கச்சார்த்த புனிதா என்றும் பொழிலாரூரா என்றும் போற்றினர். "வயிற்று நோயால் வருந்துகிறேன். அதனைப் போக்கியருள். கண்ணொளியிழந்தேன். அதனைத் தந்தருள். பொன்னையும் பொருளையும் எனக்குக் கொடுத்தருள். என் பிழையைப் பொறுத்தருள்" என்று மக்களும், "எம் வயிறு கரு உறுக; எம் கணவர் செய் பொருள் வாய்க்க; எம் கணவர் வியத்தகு அமரை அடுக" என்று மகளிரும் தமக்கு வேண்டிய வேண்டுகோளை எண்ணி வழிபட்டனர். கடவுளே யான் நின்னிடம் பொருளையும் பொன்னையும் போகத்தையும் இரக்கவில்லை. எனக்கு நீ செய்யும் அருளையும் உனக்கு நான் செய்யும் அன்பையும் அறத்தையும் எனக்கு நீ கொடுத்தருள் என்று எண்ணியும் மக்கள் வழிபட்டனர். உவா நாளில் கடல் நீராடிச் சிவனுக்கு விழாவெடுத்து வழிபட்டனர். சிவன் திருவுருவத்தை விடையேலேற்றித் தொண்டர்கள் திருநீறு பூசிக் கொடியெடுத்து விழா எடுத்தும் வழிபட்டனர்

## நினைப்பு வழிபாடு

அன்பர்கள் தம் உள்ளத்தைக் கோவிலாக்கிச் சிவபெருமானை அக்கோவிலில் எழுந்தருளுவித்து நினைப்பு முறையில் நீராட்டிப் பூச்சூட்டி விழா வெடுத்து வழிபடும் அக வழிபாடு நினைப்பு வழிபாடாம். இது யோக வழிபாடு என்றும் கூறப்படும்.

## மெய்யுணர்வு வழிபாடு

மக்கள் தம்மைப் பெற்றாரும் உற்றாரும் ஊராரும் உலகத்தை ஆண்ட அரசர்களும் காலப் போக்கில் அழிந்

தொழிந்தாராகையாலும் அவர்கள் தேடிய இடமும் பொருளும் அழிந்தொழிந்தன வாகையாலும் தம் உடம்பும் தாம் தேடிய இடமும் பொருளும் நிலையற்றவை என்று உண்மையை உணர்கின்றனர். பொருள்களின் நிலையா மையை யுணர்ந்த மக்கள் தம்மைப் படைத்துக் காக்கும் சிவபெருமானை அடைய எண்ணுகின்றனர். சிவனுடைய உரு, அருவுரு, அரு வடிவங்களை வழிபட்ட பயிற்சியால் அவ்வடிவங்களைக் கடந்து நிற்கும் அச் சிவபெருமானையும் தம் கருவிகளையும் கடந்து நின்று வழிபடுகின்றனர். உலகப் பொருள்களைக் கடந்து நிற்கும் கடவுளை, மக்கள் தம் கருவிகளையும் கடந்து வழிபடும் வழிபாடே மெய்யு ணர்வு வழிபாடாம். மெய்யுணர்வால் மக்கள் எய்தும் பயன் பிறப்பினீங்குதலும் இன்பப் பேறு பெறுதலுமாம்.

## சிவனடியார்கள்

சிவனைக் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயத்தார் சைவரென்றும் சிவனடியாரென்றும் கூறப்படுவர். பண் டைத் தமிழர் அனைவரும் சிவனையும் அவன் வடிவமாகிய கொற்றவையையும் முருகனையும் வழிபட்டவராவர். திருமுருகாற்றுப்படையைப் பாடிய நக்கீரரும் முருகன் பரிபாடல்களைப் பாடிய கடுவன் இளவெயினனாரும் நல்லந்துவனாரும் குன்றம் பூதனாரும் கேசவனாரும் நல்லழி சியாரும் நப்பண்ணனாரும் நல்லச்சுதனாரும் முருகனடியா ராவர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், திருமூலர் முதலிய அறுபத்துமூன்று நாயன்மார்களுள் சிவபெருமானைப் பாடிய சிவனடியாராவர். திருநீறணித லும் கண்டிகை அணிதலும் சிவ வேடங்களாம். சிவனடி யார்கள் அறுபத்துமூவரும் இல்லறத்திலும் துறவறத்தி லும் வாழ்ந்தவராவர். ஆண்பாலரும் பெண்பாலரும் உள்ளனர்.

அந்தணருள் திருஞானசம்பந்தரும் சுந்தரரும் மாணிக் கவாசகரும் தமிழராகிய திருநாவுக்கரசரைப் போலச் சைவ சமய குரவராகக் கூறப்படுகின்றனர். வேளாளருள் அப்பர் இளையான்குடிமாறர் முதலியோரும் இடையருள் ஆனாயரும் குயவருள் திருநீலகண்டரும் பாணருள் திருநீல கண்டத்து யாழ்ப்பாணரும் பரதவருள் அதிபத்தரும்

வேட்டுவருள் கண்ணப்பரும் சான்றாருள் ஏனாதி நாதரும் சாலியருள் நேசனாரும் சேருள் திருநாளைப் போவாரும் ஏகாலியருள் திருக்குறிப்புத் தொண்டரும் தயிலத்தொழில் மரபினருள் கலியனாரும் சிவபெருமான் திருவடிப் பேறு பெற்ற சிவனடியாராவரென்று தமிழர்களால் வணங்கப் படுகின்றனர். காரைக்காலம்மையாரும் மங்கையர்க்கரசியாரும் இசைஞானியாரும் சிவபெருமான் திருவடிப் பேறு பெற்றவராவர். இளையான் குடி மாறர் திருநீலகண்டர் முதலியோர் இல்லறவாழ்க்கையினராவர். திருநாவுக்கரசர் திருமூலர் முதலியோர் துறவற வாழ்க்கையினராவர்.

## நூல்கள்

தென்னாட்டுச் சைவசமயம் தமிழர்களுடைய வாழ்க்கையிலிருந்து தோன்றி வளர்ந்த சமயமாகும். சைவ சமயம் தமிழர் சமயமாதலின் அதற்கு முதல் நூல்கள் தமிழ் நூல்களாதல் வேண்டும். சங்க நூல்கள் சிவபெருமானையும் கொற்றவையையும் முருகனையும் தமிழர் வழிபட்ட வழிபாடுகளையும் கோட்பாடுகளையும் கூறுகின்றன.

தமிழர் கடவுள் இல்லைஎன்ற கோட்பாட்டையுடையவர் அல்லர். தமிழர் அனைவரும் சிவனையும் கொற்றவையையும் முருகனையும் தம் வாழ்க்கையில் வழிபட்டனர். தமிழர் தம் கடவுளரை வழிபட்டமுறைகளையும் அவர்கள் கொண்ட கோட்பாடுகளையும் பொதுமையில் கூறும் பத்துப்பாட்டு எட்டுத்தொகை நூல்கள் தமிழர் சமயத்திற்குப் பொது நூலாம். தேவார முதலிய திருமுறைகள் தமிழர் தம் கடவுளரை வழிபட்ட முறைகளையும் கோட்பாடுகளையும் சிறப்பாகக் கூறுதலின் சைவசமயச் சிறப்பு நூல்களுள் தோத்திர நூல்களாம். சிவஞான போதம் சிவஞான சித்தியார் முதலியன தமிழர் கடவுளினுடைய இயல்புகளையும் உயிர்கள் இயல்புகளையும் தளைகளினியல்புகளையும் விளக்கிக் கூறுதலின் சைவசமயச் சிறப்பு நூல்களுள் சாத்திர நூல்களாம்.

## சைவ சமயக் கோட்பாடுகள்

சைவ சமயக் கோட்பாடுகள் பல உள்ளன. அவற்றுள் சிறந்தது கடவுள் சிவன் ஒருவனே யாவான் என்பது. கொற்றவையும் முருகனும் சிவவடிவமே யாகும். சிவன் மக்களைப் போலப் பிறப்பவனும் இறப்பவனும் அல்லன். உலகங்களையும் உயிர்களையும் படைத்துக் காத்து அளிப்ப

வன். பேரறிவும் பேராற்றலும் பேரின்பமும் பேரருளும் உடையவன். தன்னினும் வேறு தலைவனில்லாதவன். சிவன் உலகங்களையும் உயிர்களையும் படைத்துக் காத்து அளிப்பது உயிர்களிடத்துள்ள ஆணவமலத்தைப் போக்கி அவைகளுக்குப் பேரறிவையும் பேரின்பத்தையும் கொடுத்தற் பொருட்டாம். அவன் உலகத்தினிடத்தும் உயிர்களினிடத்தும் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் இருக்கிறான், என்பனவும் தமிழர்களுடைய கடவுட் கோட்பாடுகளில் சிலவாம்.

உயிர்கள் கடவுளைப் போல் உள்பொருள்களாம். புதியனவாகப் படைக்கப்படுவனவும் பொய்த் தோற்றத்தனவுமாகா. செம்பினிடத்துக் களிம்பு போல உயிர்களினிடத்து ஆணவமலம் அவை உள்ள காலத்திலிருந்தே அமைந்துள்ளது. அது உயிர்களின் அறிவை மறைத்து அவைகளுக்கு அறியாமையைச் செய்யும். அவ்வாணவ மலம் கடவுளால் கொடுக்கப்படும் பலவகை உடம்புகளினாலும் அவற்றின் உறுப்புகளினாலும் அன்பாலும் மெய்யுணர்வாலும் உயிர்கள் சிவனை வழிபடும் வழிபாட்டினால் நீங்குகிறது. சிவனை வழிபடும் உயிர்கள் தம்மைப்பற்றியிருக்கும் ஆணவமலத்தினீங்கிப் பேரறிவு பெற்று அவனை அடைந்து அவனைப்போலப் பேரின்பம் நுகர்கின்றன என்பன தமிழர் சமயத்தினுடைய உயிர்க் கோட்பாடுகளில் சிலவாம்.

உயிர்கள் மக்கட் பிறப்பெடுத்து உலகத்தில் வாழுங் காலத்தில் அவைகள் வழிபாட்டினாலும் மெய்யுணர்வாலும் சிவபெருமானை அடைகின்றன. மக்கட்பிறப்பே எழுவகைப் பிறப்புக்களுள் சிறந்தது. மக்கள் அனைவரும் பிறப்பால் ஓரினமாவர். மக்களுள் பிறப்பினால் உயர்ந்தாரும் தாழ்ந்தாருமில்லை. மக்கள் வாழ்க்கை இல்லற வாழ்க்கை துறவற வாழ்க்கை என இரு வகைப்படும். மக்கள் சிவபெருமானை இல்லற வாழ்க்கை நெறிநின்றும் துறவற வாழ்க்கை நெறிநின்றும் வழிபடலாம். ஆண்பாலாரும் பெண்பாலாரும் வழிபடலாம். புறவுறுப்பாலும் அகவுறுப்பாலும் வழிபடலாம் என்பன தமிழர் வாழ்க்கைக் கோட்பாடுகளுள் சிலவாம்.

தென்னாட்டுத் திருமால் கோவில் வழிபாட்டு முறைகளும் கோட்பாட்டு முறைகளும் தமிழ் நூல் முறைகளும் தமிழர் நெறி முறைகளாம்.



# " தமிழ்நாடு தெய்வீகப் பேரவை "

(ஆசிரியர்)

1966 ஜூன் 13-ஆம்தேதி அன்று சென்னையில் ஹிந்து அறநிலையங்களின் ஆணையாளர் முயற்சியால் தமிழ் நாட்டுத் தெய்வீகப் பேரவை என்ற பெயரால் ஒரு பேரவை கூட்டப் பெற்றிருக்கிறது. இதில் சைவமடத் தலைவர்கள் வீர சைவ மடத்தலைவர்கள் பலரும் சங்கர மடத்தலைவரான ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளும் அறநிலைய ஆட்சித்துறை ஆணையாளரும் கலந்து கொண்டிருக்கின்றனர். வைணவ சமயத்தலைவர் யாரும் கலந்து கொள்ளவில்லை என்று அறிகிறோம். இப் பேரவையின் நோக்கமும் செயல் திட்டங்களும் கொண்ட ஒரு சிறு குறிப்புத்தாள் வெளியிடப் பட்டிருக்கிறது. இத் தாளின் முகப்பில் முழுப்பக்க அளவில் சிவாலய கோபுரத் தின் படம் பொறிக்கப் பட்டிருக்கிறது. இதைப் பின்னணி யாக வைத்துக் குறிப்புத்தாளை ஆராய்ந்து சைவ சித்தாந்தப் பெருமக்களது கருத்தைத் தெரிவிப்பது இங்கு மிகவும் அவசியமாகிறது.

"இந்து சமயப் பொதுமை உணர்வையும், பக்தி நெறி யையும் வளர்த்து, உலகியல் வாழ்க்கை நெறிக் கேற்பப் பல துறைகளிலும் பணியாற்றுவதே, இப் பேரவையின் குறிக் கோளாகும்"

இது பேரவையின்குறிப்பு. பொதுமை உணர்வு என்பது ஒருகால் இந்து மதத்தின் கொள்கைகள் எல்லா மெய்ச் சமயங்களுக்கும் பொருத்தமான சிறப்புக் கொள்கைகள் என்ற பொருளுடையதாகலாம். அங்ஙனமாயின் அது சரியே. எனினும், சைவசமயத்தைப் பொறுத்தவரையில் ஒரு நிலைமையைச் சைவமக்கள் கருதிப்பார்த்தே ஆகவேண் டும். இந்து மதம் என்றால் சங்கருடைய வேதாந்தம் என்றே உலகம் பொதுவாகக் கருதுகிறது. நம் பாடபுத்த கங்கள் கூட இந்து மதத் தலைவர்கள் என்ற வரிசையில் சங்கர், ராமானுசர், மத்துவர், என்ற இம்மூவரை மட்டுமே குறிக்கின்றன. இம்மூவருக்கும் மிகமிக முற்பட்ட காலங்

தொட்டுச் சைவசமயம் என்ற ஒரு சமயம் இப்பரத கண்டத்தில் வழங்கிற்று, இன்றும் தென்னிந்தியாவில் உள்ள மிக முக்கியமான சமயம் இது ஒன்றே. கடல் கடந்தெல்லாம் சென்று இது ஒரு காலத்தில் ஆங்காங்குள்ள மக்களைத் தன் வசம் ஈர்த்திருக்கிறது. இச் சமயத்தின் உறைவிடங்களான சிவாலயங்களைத் தென்னாட்டில் காணும் உலகினர் யாவரும் "இச்சிவாலயங்கள் உலகெங்குமே காணுதற்கரிய ஓர் அற்புதம்" என்று கூறி அதிசயிக்கிறார்கள் என்ற செய்திகளை அறிந்தோர் மிகமிக அரியர். இந்த நிலையில் மேற்கூறிய பொதுமை உணர்வுமட்டும் போதாது. சிறப்பான சைவ உணர்வையும் வளர்ப்பதில் கண்ணும் கருத்தாய் இருப்பது சைவ மக்கள் கடமை.

திருவள்ளுவர் கொல்லாமை, புலால் உண்ணாமை எனத் தம் நூலுள் இரு அதிகாரங்களை அமைத்திருக்கிறார். இந்த நெறி பற்றிய உணவு முறைக்குச் சைவம் என்றே இன்றும் பெயர் வழங்கி வருகிறது. சைவ உணவே உயர்வு என்று புலால் உண்பவர்களும் கருதி வருகிறார்கள். ஆகவே சைவம் என்பது பெயரளவாலேயே ஒரு வாழ்க்கை நெறி என்பதும் தெளிவாகப் புலப்படுகிறது.

இப்பேரவைக்குத் தேவையான நிதி திருமடங்களிலிருந்தும் திருக்கோயில்களிலிருந்தும் அளிக்கப் பெறும் என்று சொல்லப்பட்டுள்ளது. இதுநன்கு ஆராயவேண்டிய விஷயம். திருமடங்கள் ஏற்பட்டது சிவஞானத்தைப் பரப்புவதற்காக. ஆரம்பகாலத்தில் உலகமே மதிக்கத்தக்க சிவஞானிகள் தோன்றி, இம்மடங்களை நிறுவி, தங்களுடைய சீலத்தாலும், ஞான ஒளியாலும், அருள் வாழ்க்கையாலும் மக்களைக் கவர்ந்தனர். நாடு முழுமையும் இவர்களுக்கு அடிமைப்பட்டிருந்தது என்பது பொய்யல்ல. ஆங்காங்கிருந்த சைவ மக்கள் தாங்கள் நிர்வகித்து வந்த சிவாலயங்களை இந்த மடங்களில் வாழ்ந்த துறவிகளான சிவஞானிகள் கையில் ஒப்புவித்தால் இன்னும் மேலான நிலையில் அவை

நிர்வகிக்கப் பெறும் என்று கருதி அங்ஙனமே ஒப்புவித்தார்கள். இவ்வாறு நெடுங்காலம் நடைபெற்று வந்தது. ஆனால் சென்ற நூற்றாண்டின் இடைப்பகுதி தொடங்கி மடங்களில் ஞானவாழ்க்கை அருகி, உலகியல் மோகம் பெருகிற்று. அன்று முதல் இன்றுவரையில் சில மடங்களில் ஏராள செல்வம் கொழித்திருந்ததை நாம் பார்த்திருக்கிறோம். செல்வத்தைக் கவர வேண்டும் என்ற கெட்ட நோக்கங்கொண்ட போலி அடியவர்களால் சில மடாதிபதிகள் கொலை செய்யப்பட்டதையும் நாம் அறிவோம். பொறாமை காரணமாக மடங்களில் ஒன்றையொன்று விழுங்கியிருப்பதையும் நாம் காண்கின்றோம். இதன் பயனாக, மடங்களின் தலைமைப் பதவியில் உள்ளவர்கள் இன்றைய அரசியல் தலைவர்களைப் போலவே தங்கள் ஆதிக்கத்தை நிரந்தரமாக நிலை நாட்டிக்கொள்ள எண்ணி சன்மானங்களாலும், பொன்னாடைகளாலும், பதவியிலுள்ளார், அறிவாளிகள் என்று சொல்பவரை அடிமையாக்க முற்படுகிறார்கள். இது பொதுவாக நாட்டுக்கும், சமயத்திற்கும் மடங்களுக்குமே நல்லதல்ல. இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான் மடங்கள் இப்பேரவைக்கு நிதி உதவி செய்வதை நாம் கருதிப் பார்க்கவேண்டும். இன்றைய அரசியல் நிலைமையில் மடங்களின் எந்தச் செல்வமும் எந்த நிதியும், மக்களின் சமய வாழ்வுக்கோ, பொதுவாழ்வுக்கோ முழுமையும் பயன் படாமல் அடுத்து வரப்போகும் தேர்தல் முதலான அரசியல் காரியங்களுக்கு உபயோக மாகிவிடும் என்றே சைவமக்கள் அஞ்சுகிறார்கள்.

மற்றொரு குறிப்பு, சைவ சமயம் தனித்து வாழமுடியாது என்பது உண்மை, வைணவமும் வாழவேண்டும். சமார்த்தமும் வாழவேண்டும். நாடென்றும் வாழக்கேடொன்றுமில்லை. ஆனால் இன்றுள்ள சைவ சமய வாழ்க்கையிலும் பிரசாரத்திலும் சிவாலயத்தையே மையமாக வைத்து அதற்கே முதலிடம் கொடுக்கவேண்டும். சைவ மக்கள் சிவாலய வழிபாடு ஒன்றிலேயே முழுக்கவனம்

செலுத்த வேண்டும். பலவற்றையும் கலந்து கோவிந்தநாம சங்கீர்த்தனம் போடுவதால் சைவம் வளர்ந்துவிடாது. நிதி என்று பேசுமிடத்துத் தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் சிவாலயங்களின் நிதியும், சைவ மடங்களின் நிதியுமே நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு உள்ளன. இதைப் பொதுவாக இந்துமதம் என்ற பெயரால் விநியோகம் செய்வது பொருத்தமா என்பதை அறிஞர் ஆராயவேண்டும். சைவம் வாழவே இப்பொருளைப் பயன்படுத்த வேண்டும். மடங்களிலும், கோயில்களிலும் யார்யார் எந்த எந்த அறத்திற்காக நிபந்தங்கள் ஏற்படுத்தினர்களோ அவற்றுக்காகவே அவற்றின் வருமானங்களை உபயோகப்படுத்த வேண்டும் என்பது நியாயம்.

ஒரு பதிப்பாளர் குழு ஏற்படுத்தி அதன் மூலம் இந்து சமய சம்பந்தமான இலக்கியங்கள், தோத்திரத்திரட்டுகள், பிரசார வெளியீடுகள், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், நல்வழி, நன்னெறி, திருக்குறள் முதலிய நூல்களை நல்ல முறையில் வெளியிடுவதாகக் கூறியுள்ளார்கள். இது நல்லதே. ஆயினும் ஓர் எச்சரிக்கை பயனுடையதாகும். தோத்திரத் திரட்டுகள் ஆத்திசூடி முதலான நீதி நூல்கள் போன்றன மிகவும் நல்ல முறையில் எத்தனையோ பதிப்புக்கள் வெளி வந்துள்ளன. இவற்றை மீண்டும் வெளியிடும் வேலையை இக் குழுவினர் மேற்கொள்ள வேண்டியதில்லை. அதற்குப் பதிலாக இவர்களுக்கு வேறிரு வேலைகள் இப்போது கூறமுடியும். ஒன்று இதுவரையில் அச்சில் வெளி வராத சமய நூல்கள், அச்சில் வெளிவந்தும், கிடைத்தற்கரியனவாயுள்ள சமய நூல்கள் ஆகியவற்றை நன்முறையில் பதிப்பித்து வெளியிடுதல். இத்துறையில் வெளிவர வேண்டிய நூல்கள் நூற்றுக்கணக்காக உள்ளன. இவற்றில் கவனம் செலுத்துதல் சமயத்திற்கு நல்லது மற்றொன்று சமய அடிப்படைத் தத்துவங்களை விளக்குகின்ற சிறு நூல்களும் பெருநூல்களும் வெளியிடுதல். உதாரணமாக சைவம் என்றால் என்ன என்று அறிவதற்கு சிறு நூல்

களும், பெருநூல்களும் இல்லை. மூன்று தரமாக இந்நூலை வெளியிடவேண்டும். 1. பத்தாம்வகுப்புபடிக்கும் மாணாக்கன் புரிந்துகொள்ளும் அளவு சமயத்தத்துவங்களை நன்கு விளக்கிக் கூறும் நூல். 2. பி. ஏ. படித்தமாணாக்கன் நன்கு சிந்தித்து ஏற்றுக்கொள்ளக்கூடிய தரத்தில் மற்றொரு சமய விளக்க நூல். 3. தர்க்கவாதங்களோடுகூடிய பண்டிதர்கள் தரத்திற்குரிய ஆராய்ச்சி நூல். இவை பொதுவாக சமயம் முழுமைக்கும் ஒரு நூலாக எழுதவேண்டும்; சிறப்பாக சமய நுட்பங்கள் ஒவ்வொன்றையும் பற்றிய சிறிய நூல்கள்.

இவற்றிற்கும், மேலாக நாடெங்கும் இன்று கிடைக்கக் கூடியனவாய் உள்ள ஏட்டுச்சுவடிகளைப் போற்றிவைப்பது.

மருத்துவ மனைகள் அனாதை இல்லங்கள் ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணம் இப் பேரவைக்கு ஏற்பட்டது கிறிஸ்துவப் பாதிரிமார்களின் செயலைப் பார்த்து. அடியார் சேவையே ஆண்டவன் சேவை ஆயினும், இது பொதுவாக கௌரவமுள்ள எந்த அரசாங்கமும் தானே செய்யவேண்டிய காரியமேயன்றி சமயத்துறையில் செய்ய வேண்டிய காரியமாகாது.

சமயப்பேரவை செய்யவேண்டிய மிகச்சிறந்த ஒரு பணி, தேவாரப் பண்களைப் பாதுகாத்தல், வளர்த்தல். இதுபற்றி எவ்வளவு எழுதினாலும் மிகையாகாது. ஆனால் இங்கு இதற்கு இடமில்லை.

முக்கியமாக ஒரு கருத்தைக் குறிப்பிட வேண்டும் உலகத்தில் பல பாகங்களிலும் பற்பல துறைகளிலும் பற்பல சர்வகலாசாலைகள் தோன்றி வருகின்றன. சமீபத்தில் பெங்களூரில் ஒரு விவசாய சர்வகலாசாலை தோன்றியிருப்பதை நாம அறிவோம். இச்சூழ்நிலையில் நம்மை நாமே ஆராய்ந்து பார்க்க வேண்டும். தமிழருடைய நாகரீகத்தின் சிகரமாக நம்மிடையே காணப்படுவது நம்முடைய கோயில்

கள். ஆயிரக் கணக்கான கோயில்கள், ஆயிரம் ஆண்டுகளாக நின்று நிலவிவரும கோயில்கள், ஆயிரககணக்கான சிற்பங் களையும், சித்திரங்களையும், இசை, கலை, சாத்திரம, அணி கலன், விழா, வாகனம் முதலிய கலாமரபுகளையும் வளர்தத கோயில்கள் நம்மிடையேயுள்ளன. இவற்றிற்கென்றே ஒரு சர்வகலாசாலை ஏற்படுத்த வேண்டும். இது தென்னாட்டு அல்லது தமிழ்நாட்டுக் கோயில் சர்வகலாசாலை (University of South Indian Temples) என்று பெயர் பெறலாம். தமிழ்நாட்டுக் கோயில் சொததும் மடங்களின் சொத்தும் இச் சர்வகலாசாலைக்கன்றி வேறு எதற்கும் செலவு செய்யக் கூடாது என்பது எமது கருத்து. இதுபற்றிப் பின்னர் ஒருமுறை விரித்து எழுதுவோம்.

சைவமக்கள் ஒன்று உணரவேண்டும். சிவாலயங்கள் யாவும் சைவமக்களுடைய செல்வம். சைவம் என்று இங்கு நாம் சொல்வது சைவ சித்தாந்தத்தை. அதற்கு வடமொழி யும், தென்மொழியும் இரண்டும் இருமூச்சுக்கள். இதனோடு வேதாந்தம் கலப்புடையது அன்று என்பதை இவர்கள் நன்கு உணரவேண்டும். வேதாந்தம் என்று இங்கு குறிப் பிடுவது நடைமுறையுள் அகம் பிரம்மாஸ்மி என்று கூறு கின்ற சுமார்த்த மதத்தை. "அகம் பிரம்மம் என்பவர்பால் நண்ணுதே" என்பது உமாபதி சிவாசாரியர்வாக்கு. சிவா லயத்திலிருந்து நிதிதிரட்டிச் சமய வளர்ச்சிக்குப் பயன்படுத் தும்போது அது பொதுவாகப் பல துறைகளிலும் விரயம் ஆகாதபடி பாதுகாத்து சைவ மொன்றுக்கே பயன்படச் செய்வது சைவரின் பொறுப்பு. அவர்கள் விழிப்பாய் இருப்பார்களாக!

பொதுவாக, ஆலயவழிபாடு, திருமுறைப் பிரசாரம், பள்ளிகளில் சமயப்பயிற்சியைப் புகுத்தல் ஆகிய துறைகளில் இப்பேரவை தனது சிந்தனையைச் செலுத்துமாக.

---

# திருமந்திரம் அரிய உரை

(அம்பை சங்கரனார்)

நுடக்கிக் கிடந்ததோர் நூமைக் கலத்தில்
அடக்கிக் கிடந்த அமுதினை உண்ணார்
கிடக்கும் விடக்கினை நாய்தின்னக் கண்டு
நடக்கும் விடக்குரு குகின்ற வாறே

(என்பது) சுக்கில சுரோணித பரிணாமத்தாலே எடுப்புண்ட சரீரம் என்னும்படி பல முகமாகக் கேட்டும் அறிந்தும் இருக்கச் செய்தேயும் புலன் செலவிலே பொருந்தி விடயங்களிலே மயங்கி விட்டொழிய இவ் வுடம்பின்கண்ணே நின்று பரமானந்த சுகத்தைத் தரவற்றாயிருப்பதொரு பதார்த்தமுண்டென்று கொண்டு ஒரு குருவின் கண்ணே விளங்கிச் சுகமே யிராதே ........... பட்டு நாய் இச்சிக்கக் கிடக்கிற விடக்கைக் கண்டு தானும் பின்பு இறந்துபடும் என்னும்படி ........... அஞ்ஞானரை நோக்கி நொந்து சொல்லியது.

நுடக்கிக் கிடந்ததோர் நூமைக் கலத்தில் என்பது சுக்கில சுரோணித பரிணாமத்தாலே யனாதி நுடங்கி யொழுங்கு குலையாமல் கெற்ப சயனத்தின் கண்ணே கிடந்து வருவதொரு சரீரத்தின் கண்ணே யென்றபடி.

அடக்கி யென்பது இதன் கண்ணுண்டான குணத்தை மறைத்து இதன் வழியே யொழுகி யென்றபடி.

கிடந்த வமுதினை உண்ணார் என்பது இவ்வுடம்பினிடத்தே தெரியாமற் கிடந்த வமுதினைக் குருமுகமாக வறிந்து பொசித்துச் சரீரத்தை நிலையுண்டாக்கிக் கொள்ளார்களென்றபடி.

கிடக்கும் விடக்கினை நாய் தின்னக் கண்டு என்பது இவ் வழிபாடு கருதாதே விடயம் பற்றாய்த் திரிந் திறந்து பட்டு நாய் தின்னக் கிடந்த விடக்கினைக் கண்டென்றபடி

நடக்கும் விடக்குரு குகின்ற வாறே என்பது தானும் பின் பிறந்து பட்டுப்போம் என்னும்படியை விசாரியாதே அஞ்ஞானரானவர்கள் சிரியா நின்றார்கள் என்றவாறு

(குறிப்பு) இச் செய்யுள் சமாஜப் பதிப்பு முதலிய சில பதிப்புகளில் காணப்பெறவில்லை.

பத்துள்ள வாசல் பரமன் படைத்தன
பத்தினி லொன்று படிக்க விட்டது
அத்தைத் திறந்தமு துண்டய ரவரவர்
தத்துவ ஞானம் தலைப்படு வாரே.

(என்பது) பிரமா சிருட்டிக்கிற காலத்தே படைத்த வாசல் பத்திலும் அடைத்துக் கிடந்த சிரசில் வாசலைப் பரமகுருவின் தாட்கோலாலே திறந்தமுதத்தைப் பொசித்துத் தயாவற்று இருந்தவர்களல்லையோ பிரகாசமே வடிவான தத்துவத்திலே பொருந்தினார்கள் என்று ஞாதாக்களைச் சொல்லப் படுவது என்றவாறு.

(குறிப்பு) இச் செய்யுளும் சமாஜப்பதிப்பு முதலிய சில பதிப்புகளில் காணப் பெறவில்லை.

இரவும் பகலு மிலாத வரையிற்
குரவஞ்செய் கின்ற குழலியை நாடி
யரவஞ்செய் கின்ற வாவினைக் கெய்த
துரமின் துரந்தபின் சொல்லறி யோமே.

(என்பது) மூலாக்கினியை யாகுஞ் சனத்தாலே எழுப்பி மேலுண்டான நாராசந்தியினிலுள் ளுண்டான நாதத்திலே கொழுவு விக்கில் ஓசை மாண்டு சுயம்பிரகாசமே வடிவாய்ச் சுகானந்தம் சித்தித்துத் தானென்கிற வறிவு மாண்டதே என்று ஆதுஞ் சனத்தின் பெருமையை வியந்து சொல்லியது.

இரவும் பகலு மிலாத வரையில் என்பது சந்திராதித்தர்கள் வியாபரியாத சுழி முன்னடியாகிற வரையிலே என்றபடி.

குரவஞ் செய்கின்ற என்பது குரவென்று சொல்லப் பட்ட மூலாதாரத்திலே வஞ்சகத்தைச் செய்கிற நங் என்கிற அக்கினி யென்றபடி.

குழலியை நாடி என்பது அசபாக்ஷரத்தில் மீண்ட வெழுத்தாகிற நாதத்தாலே எடுப்புண்ணப் படுதலில் அக்கி னிக்குக் குழலி யென்று பெயரென்றபடி.

அரவஞ் செய்கின்ற வாவினைக் கெய்த என்பது நாத சந்தியின் நடுவே நாதமே யாக்கிக் கொண்டு நிற்கிற வினைத் தொழிலுக்கேயும் படியாக வென்றபடி.

தூரமின் என்பது இந்த மூலாக்கினியைக் கொண்டு செல்லும் என்றபடி.

தூங்கபின் என்பது இவ்விடத்திலே சென்று கூடின பின் என்றபடி.

சொல்லறியோமே என்பது நாதம் கேட்ட விடம் சிவம் என்கிற பரியாயத்திலே ஓசை மாண்டு சொயம்பிரகாசத் திலே பொருந்திய பரமானந்த சுகஞ்சித்தித்து நானென்கிற மமத்துவமுங் கெட்டுச் சுக ரூபியாமே என்றவாறு.

வஞ்சகஞ்செய் யென்றது கடைக்குறைச்சலாதலால் தனை வஞ்சகஞ்செய் என்று அம்முச் சாரியை மிக்கு நீ படிப் பொருளுரைக்க.

(குறிப்பு) இச் செய்யுளுக்கு சமாஜப் பதிப்பில் இரு வேறு உருவங்களில் இரு பாக்கள் உள்ளன.

இரவும் பகலும் இலாத விடத்தே
குரவஞ்செய் கின்ற குழலியை நாடி
அரவஞ்செய் யாமல் அருளுடன் தூங்கப்
பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே.

இச் செய்யுள் சமாஜப் பதிப்பில் 1134 ஆம் எண்ணில் காணக் கிடைக்கிறது. மேலும் 1528 ஆம் செய்யுளாக உள்ள திருமந்திரம் வருமாறு:—

இரவும் பகலும் இலாத விடத்தே
குரவஞ்செய் கின்ற குழலியை உன்னி
அரவஞ்செய் யாமல் அவளுடன் சேரப்
பரிவொன்றி லாளும் பராபரை தானே.

இவற்றில் முன்னது பூரணசத்தி என்ற தலைப்பிலும் பின்னது சத்திநிபாதம்-தீவிரதரம் என்ற தலைப்பிலும் காணக் கிடக்கிறது. இம் மூன்று செய்யுள்களையும் நோக்குங்கால் ஒரு செய்யுளின் பாடபேதங்கள் இவ்வாறு பல்வேறு வடிவில் வந்துள்ளனவோ என்று ஊகிக்க இடமுண்டு. இவை போன்று சிறு வேறுபாடுகளுடன் கூடிய ஒத்த திருமந்திரங்கள் பலவற்றைத் திருமந்திர நூலில் காணலாம். அவை பாடபேதந்தானு அல்லது அமமாறுபாட்டுக்கு யோக சாத்திர முறைப்படிச் சிறந்த பொருள்களுளவா என்பனவெல்லாம் யோக நூல் வல்லாரே முடிவுகட்ட வேண்டுவதொன்றும். அறிஞர்களின் சிந்தனைக்கும் ஆராய்ச்சி மேம்பாட்டிற்கும் இவை போன்ற பாக்கள் மிகவும் உறுதுணையாயிருக்குமெனக் கருதுவல். அறிஞர்கள் சிந்திப்பார்களாக.

---

# நெஞ்சக் கனகல்

சா. சங்கரநாராயணன்

ஆற்றுநீர் வெள்ளமாகப் போகிறது. அப்போது ஒருவன் திடீரென்று அந்த ஆற்றில் குதிக்கிறுன். அவனுக்கு நீந்தும் ஆற்றல் இருக்குமானுல் அந்த வெள்ளத்தோடு போகாமல் மீண்டும் நீந்திக் கரை ஏறுவான். அந்த ஆற்றல் இல்லாவிட்டால் ஆற்றேடு அடித்துக்கொண்டு போகப்படுவான், அது மாத்திரம் அல்ல; அந்தத் தண்ணீரினுள் மூழ்கி இறந்துபோவான். நீந்தும் ஆற்றல் உடையவர்கள கடலிலோ, குளத்திலோ விழுந்துவிட்டால் உடனே மூழ்கி இறந்துவிடமாட்டார்கள். சற்றுக் கால் கைகளை அடித்துக்கொண்டு நீந்த முயல்வார்கள. சில சமயங்களில் தெப்பக் கட்டையிலே படுத்துக்கொண்டால்

கடலிலே மிதக்கலாம். நீந்தினாலும் சரி, நீந்தாவிட்டாலும் சரி தெப்பக்கட்டை பக்கத்தில் இருக்குமானால் கடலிலே ஆழாமல் காத்துக் கொள்ளலாம்; கப்பலோ, ஓடமோ வரும்வரைக்கும் கடலின்மேலேயே நீந்திக் கொண்டிருக்கலாம். ஒருவன் தன்னுடைய இடுப்பிலே கயிற்றோடு கல்லைக் கட்டிக்கொண்டு கடலுள் மூழ்குவதாக வைத்துக் கொள்வோம்; அப்பொழுது அவன் நேரே கடலின் கீழே பிரயாணம் செய்வானே தவிர, கடலின்மேலே மிதக்க முடியாது; நீந்தவும் முடியாது.

பிறவி ஒரு பெரிய கடல்--அதற்கு எல்லையே இல்லை. "பிறவிப் பெருங்கடல் நீந்துவர்" என்று திருவள்ளுவர் சொல்லுகிறார், எப்பொழுதும் அலை அடித்துக்கொண்டிருக்கிற கடல் அது. "தனியனேன் பெரும் பிறவிப் பவ்வத் தெவ்வத்தடந்திரையால் எற்றுண்டு" என்று மாணிக்க வாசகர் பாடுகிறார். அந்தப் பெருங்கடலிலே மக்கள் எல்லோரும் வீழ்ந்திருக்கிறார்கள். விழுந்து மேலே மிதப்பது இல்லை. ஏனென்றால் அவர்கள் ஒரு கல்லைக் கட்டிக்கொண்டு வீழ்ந்திருக்கிறார்கள் அதனால் இந்தக் கடலுள் ஆழ்ந்து, ஆழ்ந்து போய்க்கொண்டிருக்கிறார்கள். அவர்களை முதலில் கடலின் மேற்பரப்பிலே மிதக்க விட்டால்தான் கடலிலே வரும் கப்பலோ தெப்பமோ அவர்களுக்குப் பயன்படும். எத்தனைதான் பெரிய கப்பலாக இருந்தாலும், அந்தக் கப்பலைத் திறமை யுள்ளவனும், துணிவுள்ளவனும் ஓட்டிக்கொண்டு சென்றாலும், கடலுள் ஆழ்ந்து போகின்றவர்களுக்கு அதனால் பயன் ஒன்றுமே இல்லை. கடலின்மேலேமிதந்தால்தான் அந்தஓடத்தினாலோ, தெப்பத்தினாலோ பயன்பெற முடியும். மனிதர்கள் பிறவியாகிற பெருங்கடலில் கல்லைக்கட்டிக்கொண்டு விழுந்து விட்டார்கள். ஆழ்ந்துபோய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கீழேபோகும் பிரயாணத்திற்கு முடிவு கட்டிவிட முடியாததற்குக் காரணம் அந்தக் கடலானது மிகமிக ஆழமாக இருப்பதே. அந்தக் கடலுள் மூழ்குகிற ஒருவனை கடலின்மேலே இருக்கிற தெப்பக்காரன் ஒருவன் காப்பாற்றலாம் என்று நினைத்தாலும் முடியாது. கடலின் மேலே முதலில் அவனை மிதக்கவைக்க வேண்டும். அதா

வது அவனோடு கட்டியிருக்கிற கல்லை அறுத்து எறிந்தால் அவன் மேலே மிதப்பான்; இல்லையானால் கடலின்மேலே இருக்கிற தெப்பக்காரன் கருணைக்குப் பாத்திரமாக முடியாது. பிறவி என்னும் பெருங்கடலில் ஆழ்ந்து செல்லுகிற உயிர்கள் எல்லாம் நெஞ்சம் என்கின்ற ஒரு கல்லைக் கட்டிக்கொண்டு விழுந்திருக்கின்றன. அது சாமான்யமான கல் அன்று; கனமானகல். அதை அறுத்து எறிய முடியாது; பொடியாகவும் பண்ணமுடியாது; ஆனால் அதற்கு ஒரேஒரு தன்மை இருக்கிறது. அந்தக் கல்லை உருக்கி விடலாம். உருக்கி விட்டால் அது நீரோடு நீராகப் போய்விடும். அப்போது அதைக் கட்டிக்கொண்ட உயிரானது மேலே மிதக்கும்; இறைவன் தன்னுடைய திருவடிகளாகிய தெப்பத்தை வைத்துக்கொண்டு மேலே வருகிறவர்களைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறான். அந்தத் தெப்பத்திலே ஏறுவதற்கு, மேலே மிதந்துவருகிற மக்கள் ஆசைப்பட்டால் உடனேயே ஏற்றிக்கொள்வான். "இறைவன் திருவடி சேர்பவர் பிறவிப் பெருங்கடல் நீந்துவர்" என்று திருவள்ளுவர் சொல்கிறார். பிறவிப் பெருங்கடலின் மேலே யாரேனும் வந்து மிதந்தால் அவர்களை ஆட்கொள்ளவேண்டுமென்று இறைவன் அருள் தோணியுடன் காத்துக்கொண்டிருக்கிறான். கீழே ஆழ்ந்து கொண்டிருக்கிற மக்களோ, அவன் எவ்வளவு கருணை உடையவனாக இருந்தாலும், அந்தக் கருணைக்குப் பாத்திரர் ஆகமுடியாது. இதற்குக்காரணமாக இருப்பது அவர்களுடைய நெஞ்சம் ஆகிற கனகல். அந்தக்கல்லை உருக்கி விட்டால், நீராக உருக்கி விட்டால், அப்போது அவர்கள் மேலே மிதக்க முடியும். பிறவிப் பெருங்கடலில் ஆழாமல், மிதந்துகொண்டு இருக்கும்போது இறைவனை நினைப்பார்கள். அருகிலுள்ள தெப்பமாகிற கருணையிலே ஏறிக் கொள்ளமுடியும்.

நெஞ்சக் கன கல்லினால் நாம் பிறவிப் பெருங்கடலில் ஆழ்ந்து கொண்டிருக்கிறோம். அப்படி ஆழ்கிறபோது இறைவன் ஒருவன் இருப்பது சிலசமயங்களில் நினைவுக்கு வந்தாலும், அவனைப்பற்றிக் கொள்வதற்கு உரிய ஆற்றல் நமக்கு இருப்பதில்லை. நெஞ்சம், வேறு வேறு சிந்தைகளில்

நம்மைத் திருப்பிச் செல்கிறது. அதனால் பல பல காரியங்களைச் செய்கிறோம்; பல பல பேச்சுக்களைப் பேசுகிறோம். இடையிடையே ஆண்டவனுடைய திருநாமத்தையும், நினைப்பையுங் கொண்டிருந்தாலுங்கூட மிக ஆழமாக அழுத்தமாக நமக்கு அவன் நினைவு உண்டாவதில்லை. நம்முடைய நெஞ்சிலே அவனுடைய பக்தி ஆழமாகப் பதிவது இல்லை. பதிவதாக இருந்தால் நெஞ்சமாகிற கனகல் உருகி விடும். நெஞ்சு உருகினால்தான் குறையில்லையே! நாம் மேலே மிதக்கலாம். இறைவனுடைய கருணைத் தோணியைப் பற்றிக் கொள்ளலாம். நெஞ்சம் என்ற கல்லை அறுத்து எறியவும் முடியாது; உள்ளபடியே வைத்திருந்தாலும் துன்பம். அதை உருக்கி நமக்கு அதனால் வருகின்ற துன்பத்தைப் போக்கிக்கொள்ளலாம். அப்போது இறைவனுடைய திருவடியைப்பற்றிக் கொள்ளுகின்ற நிலைவரும். அப்படியானால் நெஞ்சை உருக்குவதற்கு வழி என்ன? நெஞ்சை உருக்கினால்தான் இறைவனுடைய திருவடிப்புணையைப் பற்றிக்கொள்ளலாம் என்ற உண்மையைத் தெரிந்து கொண்டவர்களுக்கு நெஞ்சை உருகவைப்பதற்கு என்ன தந்திரம் என்பதைத் தெரிந்துகொள்ள ஆசை உண்டாகும் அல்லவா? நெஞ்சு எவ்வாறு உருகும்?

நம் நெஞ்சு இப்பொழுதும் உருகுகிறது. எப்படி உருகுகிறது? ஒரு குழந்தைக்கு நோய் வந்துவிட்டது. மிகவும் அருமையாகப் பெற்ற குழந்தை அது. அப்போது நம்மனம் உருகுகிறது. நம்மனைவிக்கு ஏதேனும் நோய் வந்துவிட்டது. அப்பொழுதும் மனம் உருகுகிறது. நமக்குக் கையில் பணம் இல்லை. அப்பொழுதும் நெஞ்சு உருகுகிறது. ஏதேனும் துன்பம் வந்தது. அப்பொழுதும் உருகுகிறது. நமக்கோ நம்மைச் சார்ந்தவர்களுக்கோ துயரம்வந்தால் நெஞ்சு உருகுகிறது. நம்முடைய உபகாரி ஒருவரைப் பற்றித்தெரிந்து கொள்ளுகிறோம். அப்பொழுதும் நெஞ்சு உருகுகிறது. துன்பம் வந்த போது நெஞ்சம் உருகுவது இயற்கை. இப்பொழுது நாம் உருகுகின்ற உருக்கம் உலகத்திற்குரிய பொருள்களை நினைந்து உண்டாவது. ஆனால் இறைவனாகிற பெரும்பொருளை அணுகி,

அவனோடு ஒன்றி வாழ்வதற்காகவே அமைந்த நாம் அவனைப் பிரிந்து பிறவிப்பெருங்கடலில் ஆழ்கிறோமே என்று நினைந்து உருகுவது இல்லை. அதுதான் நாம் அடைந்துள்ள துன்பங்களுக்குள்ளேயே மிகப் பெரிய துன்பம். பிறவியாலே வருகின்ற துன்பந்தான் மற்ற எல்லாத் துன்பங்களுக்கும் மூல காரணமாக இருப்பது.

உடம்பிலே வியாதி வருகின்றது. அதைத் துன்பமென்று சொல்லுகிறோம். ஆனால் அந்த உடம்பைப் பெற்றதே பெரிய துன்பம் அல்லவா? உடம்பு இருப்பதால் தானே மற்ற வியாதிகள் வருகின்றன? அந்த உடம்பைப் பெற்றதே பெரிய வியாதி. அதைத்தான் பிறவிநோய் என்று சொல்லுவார்கள். இந்தப்பிறவியாகிற நோயைப் போக்க நாம் வழிகோல வேண்டும். அந்தத்துன்பத்தை நினைந்து நெஞ்சம் உருகவேண்டும். நாம் இந்தப் பிறவியாகிறகடலிலே அகப்பட்டு அல்லற்படுகிறோமே, நம்மைக் காப்பாற்றுவார் ஒருவரும் இல்லையா? நாள்தோறும் பலவற்றை நினைந்து பலவகையான கவலைகளை மேற்கொள்ளுகிறோமே. இதிலிருந்தும் மாறுவதற்கு ஏதேனும் வழி கிடைக்காதா'' என்று ஏங்கி உருகவேண்டும்.

அப்படி உருகினால் மாத்திரம் போதாது. வயிற்றுப் பசி உடையான் ஒருவன், ''ஐயோ, ஐயோ பசிக்கின்றதே'' என்று அழுதால் போதாது. அந்தப்பசியைத் தீர்ப்பதற்கு உணவு எங்கே உண்டென்று உணர்ந்து, அந்த உணவைப் பற்றி நினைந்து அதைப்பெறுவதற்கு முயற்சி செய்ய வேண்டும். அதேபோல் நமக்குத்துன்பம் உண்டு. அதை நினைந்து உருகுவதோடு நின்றால் மாத்திரம் நமக்கு ஒரு தீர்வு கிடைக்காது. இந்தத் துன்பத்தை நீக்குவதற்குக் கருணையாளனாகிற ஆண்டவன் ஒருவன் இருக்கிறான் என்ற நினைவு வேண்டும். அந்த நினைவிலேயும் உருக்கம் ஏற்படும். நம்முடைய துன்பத்தை நினைந்த உருக்கம் துன்பத்தோடு வரும். ஆண்டவனை நினைந்து உண்டாகின்ற உருக்கம் நம்பிக்கையோடு வரும். வெறும் துன்பத்தினால் அவனை நினைந்த உருக்கம் மாத்திரம் போதாது.

இறைவனுடைய கருணையைநினைந்து அதனாலே நம்பிக்கை ஏற்பட்டு, இன்னும் அவன் நமக்கு அருள்செய்யவில்லையே என்று ஏங்குகிற உருக்கம் இருக்கிறதே அதுதான், பயனைத் தரும். அந்த உருக்கத்திற்குத்தான் பக்தி என்று பெயர். இறைவனோடு சேர்ந்திருக்கவேண்டிய நாம் இறைவனை விட்டுப்பிரிந்து கிடக்கின்றோமே என்ற ஏக்கத்தினாலே உள்ளம் உருகுகிறது. அந்த உருக்கம் பக்தியின் பாற்படும். நெடுங்காலம் தாயைப் பிரிந்த குழந்தை வருந்துகின்றது போல, பசுவை விட்டுப் பிரிந்த கன்று உருகுவதுபோல, உருகுகின்ற உருக்கம் அது. அந்த உருக்கம் பக்தியின் விளைவு. அப்படி உருகினால் நெஞ்சில் உண்டான துன்பம் நீங்கும்.

அருணகிரிநாதர் அநுபூதியைப் பாடினார். அதனால் என்ன பயன் என்பதை அவர், நூலின் தொடக்கத்திலே சொல்லிவிடுகிறார். 'நெஞ்சமாகிய கனத்த கல் உருகும் படியாக இதைப்பாட ஆரம்பிக்கிறேன். இதற்கு ஆனைமுகக் கடவுள் அருள்செய்ய வேண்டும்' என்று காப்புக் கூறுகிறார்.

"நெஞ்சக் கனகல் லும்நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரஆ னைபதம் பணிவாம்"

---

## ஆடிமாத விசேட தினங்கள்

8 (24-7-66) பெருமிழலைக்குறும்ப நாயனார் விழா.
9 (25-7-66) சுந்தரமூர்த்தி சுவாமிகள் விழா.
,, ,, கழறிற்றறிவார் நாயனார் விழா.
12 (28-7-66) கலிய நாயனார் விழா.
,, ,, கோட்புலி நாயனார் விழா.
25 (10-8-66) மூர்த்தி நாயனார் விழா.
,, ,, புகழ்ச்சோழ நாயனார் விழா.
28 (13-8-66) கூற்றுவ நாயனார் விழா.

# மதிப்புரை

திருவாதவூரர் திருப்பதிகம் என்னும் நூல் ஒன்று வரப் பெற்றோம். இது அண்ணா திரு. நா. ப. தணிகையரசு அவர்களால் இயற்றப்பெற்று திருக்கழுக்குன்றத்தில் இருபத்தொன்றாம் ஆண்டு ஆனி மாதத் திருமுறை இன்னிசைப் பெருவிழாவில் 23—6—66 அன்று வெளியிடப் பெற்றது.

பதிகத்திலுள்ள பாக்கள் யாவும் ஆசிரியருக்குத் திருவாதவூரரிடத்துள்ள ஈடுபாட்டின் மிகுதியைத் தெற்றென விளக்கும். மேலும் இந்நூலைப் படிப்போரையும் திருவாதவூரரிடத்து ஈடுபடுத்தும் தன்மையானவாயுமிலங்குகின்றன. மாணிக்கவாசகர் வரலாற்றுச் சிறப்பைச் சுருக்கி இப்பதிகம் கூறுகிறது. ஆசிரியர் நூன்முகத்தில் தவத்திரு குருகுலம் அழகரடிகளார் துதியாக இருபாக்களையும் திருவடி போற்றல் என இரு பாக்களை நூல் இறுதியிலும் சேர்த்துள்ளார். இது மாணிக்கவாசகரிடத்து அன்பூட்டும் நல்ல நூல். யாவரும் பெற்றுப் படித்துப் பயனுறுக. விலை குறிக்கப்பெறவில்லை. நூல் கிடைக்குமிடம் :—
திரு. நா. ப. தணிகையரசு, இந்துமத பாடசாலை, வாலாஜாபாத்து, செங்கற்பட்டு மாவட்டம். (அம்பை)

பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் அருளிச் செய்த ஆறுமண்டல நூல்களுள் நான்காம் மண்டலத்துள பத்துப் பிரபந்தத்தில் உள்ள இறுதி மூன்று பிரபந்தங்கள் சஷ்டி வகுப்பு, தக்க ஆனந்தக் களிப்பு, அனவரத பாராயணாஷ்டகம் என்பன. இம்மூன்றும் முறையே விரதாதி தினங்களிலும், அவன் பெருமை பாடித் துதிக்கும் நாட்களிலும் தினவழிபாட்டிலும் பாடத்தக்கன. சிறந்த சந்த இசைப்பாக்களைக் கொண்டன. அருணகிரி நாதருக்குப் பின் சந்தப் பாக்கள் பாடுவதில அண்மைக் காலத்தில் அவன் அருள் பெற்ற முனிபுங்கவர் பாம்பன் அடிகள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவர்கள் பாக்கள் மக்களை இறையருள் நாட்டத்து ஆற்றுப் படுத்தும் என்பது உறுதி. ஆகவே அன்பர்கள் யாவரும் பாராயணம் செய்து உய்தி பெறும் பொருட்டு ஸ்ரீ சிவசுப்பிரமணிய பக்தஜன சபையார் இம்

மூன்று நூல்களையும் வெளியிட்டுள்ளனர். இவற்றிற்குத் திருப்புகழ்ச் சதுரர் திரு. சே. த. இராமலிங்கம் பிள்ளை அவர்கள் B.A., B.T. அரிய ஆராய்ச்சிக் குறிப்புரை ஒன்றும் எழுதியுள்ளார்கள். அது அம்மூன்று நூல்களின் பெருமையையும் தெற்றெனப் புலப்படுத்துகின்றது. யாவரும் இந் நூலை வாங்கிப் படித்துப் பயன் பெறுக. விலை குறிக்கப் பெறவில்லை. நூல் கிடைக்கும் இடம்:— செயலாளர், ஸ்ரீ சிவசுப்பிரமணிய பக்தஜன சபை, சென்னை-14.

(அம்பை)

திருநாவுக்கரசு தேவர் திருஏகாத சமாலை மூலமும் உரையும் என்னும் நூல் ஒன்று வரப்பெற்றோம். திருநாரையூர் நம்பியாண்டார் நம்பியவர்களால் இது பாடப் பெற்றது. பதினோராம் திருமுறையில் சேர்க்கப் பெற்ற பல நூல்களுள் இதுவும் ஒன்று. இதற்கு திரு. ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார் அவர்கள் அழகிய உரை ஒன்று எழுதியுள்ளார்கள். திருப்புகலூர் அக்னீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தாரால் இது வெளியிடப் பெற்றுள்ளது. தற்காலத்துச் சமயக்கண் கொண்டு சமய இலக்கியங்களுக்கு உரையெழுதப் புகுவோர் அரியர். அங்ஙிலையில் இப் பெரியார் அவர்கள் நன்முறையில் தகுந்த சமய மேற்கோள்கள் கொடுத்து பாடல்களின் திறத்தை விளக்கிச் செல்லும் முறை மெச்சத்தக்கது. பண்டை உரையாசிரியர்களின் அடியொற்றியே மிடுக்கோடு உரையெழுதும் பான்மையையும் இவ்வுரையைப் படிப்போர் கண்டின்புறலாம். இந் நூல் திருவதிகை அப்பர் இல்ல ஆதரவிற்காகக் கொடுக்கப்பட்டதாதலின் இதனை விற்றவரவு அவ் வில்ல ஆக்கத்திற்குப் பயன்படும். அதனால் இந் நூலை வாங்கும் அன்பர்கள் ஒரு கல்லில் இரு மாங்காயைப் பெறும் தன்மைக் கேற்ப இந் நூலைப் படித்துப் பயனடைவதோடு அப்பர் இல்லத்திற்கும் ஆதரவு புரிந்த சிவபுண்ணியப் பேற்றினைப் பெறுவர். அதனால் அன்பர்கள் யாவரும் இதனை வாங்கிப் படித்துப் பயன் பெறுவார்களாக. விலை ரூ. 1-00. நூல் கிடைக்குமிடம்:— ரா. சண்முகசுந்தரஞ் செட்டியார், அப்பர் இல்லம், திருவதிகை, பண்ணுருட்டி வழி, தென்னார்க்காடு மாவட்டம்.

(அம்பை)

## பொன் மொழிகள்

ஆல்பர்ட் சுவிட்சர் (Albert Schweitzer) என்ற ஜெர்மெனிய தத்துவஞானி "இந்தியக் கருத்துக்களும் அவைகளின் வளர்ச்சியும்" Indian thoughts and its Development) என்ற தன் நூலின் முன்னுரையில் பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறார் :—

"குறியீட்டுச் சொற்கள் (பரிபாஷை) எந்த தத்துவத்திற்கும் (ஆங்கிலத் தத்துவமாயிருந்தாலும் சரி) ஆபத்து. ஒரு சாலையில் வண்டிகள் சென்ற பள்ளங்கள் வண்டிகளின் போக்குவரவிற்கு எவ்வளவு தடையாக யிருக்கின்றனவோ, அதேபோல இக்குறியீட்டுச் சொற்கள் வாய்பாடுகளாக மாறி எண்ணங்களின் இயற்கையான வளர்ச்சிக்குத் தடையாக யிருக்கின்றன. ஆகையால் ஒரு தத்துவத்தின் உண்மையான கருத்துக்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமானல், அதை, தனக்கென்று உண்டுபண்ணிக்கொண்ட குறியீட்டுச் சொற்களை விட்டு, பழக்கமான, புரியக்கூடிய மொழியில் தன் கருத்துக்களை விளக்கும்படி வற்புறுத்தவேண்டும்."

இக் கருத்துக்கள் சைவ சித்தாந்திகள் சிந்திக்கற்பாலன. பலர் கைபட்டு நாளடைவில் நாணயங்கள் தேய்ந்து செல்லாக் காசாகி விடுவதுபோல குறியீட்டுச் சொற்களும் நாளடைவில் பொருட்கொழுமை யிழந்து உள்ளீடில்லாத ஆரவாரத்திற்குப் பயன்படுகின்றன. குறியீட்டுச் சொற்களேயில்லாமல் சைவ சித்தாந்தந்தை விளக்க முயற்சித்தல் பயனுடையதா யிருக்கும்.

(கொ. நீ. சிங்காரவேலு.)

---

## இலங்கையில் புலோலி பசுபதீச்சுரர்

திருக்கோயிலில் கோபுரத் திருப்பணி வேலை 1964ஆம் ஆண்டு கார்த்திகை முதல் தேதியில் தொடங்கி நிகழ்ந்து கொண்டிருக்கிறது. இன்னும் அது முற்றுப் பெறவில்லை. இலங்கை, மலேயா, தமிழ்நாடு வாழ் சைவ அன்பர்கள் "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னல் முடியும்" ஆதலின் தத்தம்மால் இயன்றவாறு பொருளுதவி செய்து அத்திருப்பணியை முற்றுவிக்கச் சிவ புண்ணியப் பயனை அடைய வேண்டுகின்றோம். பணம் அனுப்புவோர் "சைவப் புலவர் வ. சுப்பிரமணியம், மேற்பார்வையாளர், தும்பளை, இலங்கை" என்ற முகவரிக்கு அனுப்பிவைக்கக் கேட்டுக் கொள்கின்றோம்.

திருவிராமேச்சுரத்தில் 11—7—66 முதல் 28-7-66 முடிய ஆடித் திருக்கல்யாணத் திருவிழா மிகச் சிறப்பாக நிகழ்ந்து கொண்டிருக்கிறது. சிறந்த சொற்பொழிவுகள் இன்னிசையரங்குகள், வேதபாராயணம், திருமுறைப் பாரா யணம் முதலியன நிகழ்ந்து வருகின்றன. அன்பர்கள் யாவரும் திருவிராமேச்சுரப் பெருமானைத் தரிசித்து அங்கு நடந்துகொண்டிருக்கும் திருப்பணிக்கும் தங்களாலான உதவியை அளித்து இறையருள் பெற்றுய்தி பெற வேண்டுகின்றோம்.

செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள திருப்போரூர் கந்தசாமி தேவத்தானத்திற்கு உருக்கமாய்ப் பாடவல்ல தேவார ஓதுவார் ஒருவர் தேவை. தகுந்த ஊதியம் கொடுக்கப் பெறும். விண்ணப்பம் "அருள்திரு சிதம்பர சிவஞான சுவாமிகள், கந்தசாமி தேவத்தானம், திருப்போரூர், செங்கல்பட்டு மாவட்டம் எனும் முகவரிக்கு 10—8—66க்குள் அனுப்புமாறு கேட்டுக்கொள்ளப் பெறுகிறார்கள்.

---

ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடம் சங்கராச்சாரியார் மடத்தின் சார்பில் திருவாவடுதுறை தமிழ்வித்வான் திரு. தி. பொ. ஸ்ரீநிவாச ஐயர் அவர்கள் குன்றத்தூர் சேக்கிழார் சுவாமிகள் திருக்கோயிலில் 20-6-66 முதல் 1-7-66 முடிய பெரிய புராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். சித்தாந்தம் துணையாசிரியர் வித்துவான் அம்பை சங்கரனார், ஆசிரியர் அரங்கசாமியார் ஆகியோர் நிறைவு விழாவன்று சொற்பொழிவாளரைப் பாராட்டிப் பேசினர். மானேஜிங் தர்மகர்த்தர் திரு. சி. பாலசுப்பிரமணியம் அவர்கள் இது குறித்து எடுத்துக் கொண்ட முயற்சி பாராட்டத்தக்கது.

சைவப் பிரசங்க ஞானபாநு திரு. கா. இராஜாராம் பிள்ளை அவர்களின் திருவுருவப் படத்திறப்பு விழா 19-6-66 அன்று தங்கசாலை வீதி ஸ்ரீ ராமகல்யாணம் பேரிசெட்டிச் சத்திரத்தில் நிகழ்ந்தது. சைவப்பெரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளை, B.A., L.T., அருள்திரு அழகர் அடிகள், புலவர் முருகவேள், M.A., M.O.L., பூ. ஆலால சுந்தரம் செட்டியார், M.A., முதலிய பேரறிஞர்கள் பலர் கலந்து பாராட்டுரை வழங்கினர்.

இரவு நேரங்களில் பத்து நாட்களும் டாக்டர், மா. இராச மாணிக்கனுர், சே.த இராமலிங்கம் பிள்ளை, பாலூர் வித்வான், கண்ணப்ப முதலியார், மறை. திருநாவுக்கரசு முதலிய இருபது அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர். கடைசிநாள் விழாவிற்குத் திரு. ஜே. சிவசண்முகம் பிள்ளை, எம்.பி. தலைமை பூண்டு அருமையாகப் பேசினர். அனைவரையும் வரவேற்றும் நன்றி கூறியும் விழாவைச் சிறப்பாக முன்னின்று நடத்தியவர் செயலாளர் வித்வான் மறை. திருநாவுக்கரசு ஆவர்.

## ஸ்ரீ ராமகிருட்டின குடில்

### அனாதைச் சிறுவர்களுக்குப் புகலிடம்

ஸ்ரீராமகிருட்டின குடில் தமிழ் நாட்டிலுள்ள தாய் தந்தை இருவருமேயற்ற ஏழை அனாதைச் சிறுவர்களுக்கென்றே ஏற்பட்டுள்ள தனிப்பெரும் தர்மஸ்தாபனம். அவர்களுக்காகவென்றே குருகுலமும் (ஹாஸ்டல்) வித்யாலயமும் (ஹைஸ்கூல்வரை) இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டும் (எலெக்ட்ரிக் மோட்டார் பம்ப் செட் உற்பத்தியும் பயிற்சியும்) ஏற்பட்டிருக்கின்றன. இதுசமயம் 300க்கு மேற்பட்ட சிறுவர்கள் இங்கு புகலிடம் பெற்று இறையருளால் வாழ்ந்துவருகின்றனர்.

ஜாதி, மத, இன, கட்சி பேதமின்றி மனிதசமுதாய முழுமைக்கும் இங்குப் புகலிடம் பெற உரிமை உண்டு. 5 வயது முதல் 10 வயதுவரையிலுள்ள சிறுவர்களை மட்டுமே எடுத்துக்கொண்டு அவர்களுக்கு உணவு, உடை, கல்வி, தொழிற்பயிற்சி ஆகிய யாவும் அவர்கள் ஆளாகும்வரை முற்றும் இலவசமாகவே வழங்கப்படுகிறது. ஸ்தாபனம் ஏற்பட்ட காலத்திலிருந்து இங்குச் சேரவந்த எந்த ஒரு சிறுவருக்கும் எங்கள் விதிக்குப் பொருத்தமாயிருந்து '' இடமில்லை '' என்று இதுவரை மறுத்ததில்லை. இந்தத் தர்ம ஸ்தாபனத்தின் இலட்சியமே யாரும் ஆதரிப்பாரின்றி அவல நிலையில் திரியும் தாய் தந்தை இருவருமே அற்ற அனாதைச் சிறுவர்கள் தமிழ் நாட்டில் யாருமே இனி இல்லை என்ற நிலையை ஏற்படுத்துவது தான்.

ஆகையால் அனாதை மக்கட்சேவையில் ஆர்வமுள்ள யாவரும் ஷ நிலையிலுள்ள அனாதைச் சிறுவர்களை இங்குச் சேர்த்துவிட கீழ்க்காணும் விலாசத்திற்கு முதலில் விபரங்களுக்கு எழுதலாம்.

தலைவர், ஸ்ரீ ராமகிருட்டின குடில்,

திருப்பராய்த்துறை அஞ்சல், திருச்சி மாவட்டம்.

மலேயா திரு. K. இராமநாதன் செட்டியார் அவர்கள் எண்டோமெண்டுக்காக மலேசியா Sri A. S. சுந்தரம் (21. கிரீன்லேன், சிரம்பான், மலேசியா) அவர்கள் ரு. 100 தந்துதவியுள்ளதை மகிழ்ச்சியுடனும் நன்றியுடனும் தெரிவித்துக் கொள்கின்ருேம்.

அரக்கோணம் வட்டம் நெமிலி அப்பர் சுவாமிகள் வார வழிபாட்டுச் சபையில் 23-6-66 வியாழன் அன்று மாணிக்க வாசகர் திருவிழா சிறப்புற நிகழ்ந்தது.

1. திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபை சார்பில் மாணிக்க வாசக சுவாமிகள் திருநாள் 23—6—1966ல் கொண்டாடப் பெற்றது. "சித்தாந்தக் கலைமணி" மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்கள் "அன்பர் மொழி வாசகம்" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினர்.

2. திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபைச் சார்பில் 12—6—66 முதல் தொடர்ந்து, சித்தாந்தக் கலைமணி மகா வித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார் அவர்களால் நடத்தப் பெற்று வந்த "இருபா இருபஃது" "வினு வெண்பா" ஆகிய இரு சாத்திரப் பாட வகுப்பு நிறைவு விழா 26—6—66ல் திரு. L. A. R. அருணுசலம் பிள்ளை அவர்கள் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. திரு. தி. சு. சிவப்பிரகாசம் நன்றி கூறினர்.

இராமநாதபுரம் ஆசிரியர் திரு. R கிருஷ்ணசாமி நாயகர் அவர்களின் 25ஆம் ஆண்டு நினைவுமலர் வரப்பெற்ருேம். இதன் மூலம் திரு. நாயகர் அவர்கள் செம்மையான வாழ்வு வாழ்ந்தது பற்றிய பல விவரங்கள் வெளியாகின்றன. மேலும் ஒரு சிறந்த பாராயணத் திரட்டையும் பிற்சேர்க்கையாக இது கொண்டுள்ளது. இத்திரட்டில் நிலையாமை, நெஞ்சறிவுறுத்தல், திருநீறு முதலிய சமயச் சின்னங்கள், பதி, பசு, பாச வுண்மை ஆகிய பல்வேறு தலைப்புகளில் நூற்றுஐம்பதுக்கும் மேலான பாக்கள் தொகுக்கப்பெற்றுள்ளன. இது நாள் தோறும் பாராயணம் செய்ய த்தக்க நல் திரட்டாகும். விலை குறிக்கப் பெறவில்லை. பிரதிகள் வேண்டுவோர் R. K. சச்சிதானந்தம், பரஞ்ஜோதி நிலையம், சுபாஷ் நகர், சென்னை—44 என்ற முகவரிக்கு 25 காசுகள் தபால் தலை அனுப்பி வாங்கிக் கொள்ளலாம். (அம்பை)

Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1. by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.